

விலாசம்:—

குருசுவாமிகள்

ஸ்ரீ. க. சிவப்பிரகாச சுவாமிகள்

மடாலயம்.

வியாசர்பாடி.

பெரம்பூர் பாராக்ஸ் போஸ்டு

சென்னை.



உ

சற்குருப்யோ நம:.

ஸ்ரீ சாந்த லிங்க சுவாமிகள்

அருளிச் செய்த

# வைராக்கிய தீபம்.

---

இது

திருப் பூவண மடாதிபதி

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய

சுவாமிகளாலும்

ஸ்ரீ. க. சிவ. மடாலயம் குரு சுவாமிகளாலும்

அச்சியற்றப் பெற்றது.

---

பால சுப்ரமண்ய ஸ்வாமி பிரஸ்,

சென்னை.

1922.



# வைராக்கிய தீபம்.

---

திருவளர் கமலத் தயன்செயிப் புவி
முன் றிகழ்தரு முலகெலாந் தன்பான், மருவு
சிற் சத்தி யெனுங்கிர ணத்தால் வந்தெழு
கானனீ ராக, விருமையா மதமாய்த் தறிஞ
ராங் காந்தத் திடையருட் சுடருமிழ்ந் தில
ங்கு, மொருசிவா தித்தன் றனைநம திருள்
போ யொழியநா டொருமிறைஞ் சிடுவாம்.

துன்னியா ணவப்பாம் பெமதறி வெனு
மோர் சுடர்கெழு பூரண மதியை, முன்ன
மே தீண்டிற் றொளிவெளிப் படலான் மோ
சந காலமெய் தியதாற், றன்னிடத் தீசன்
முதற்புவி முடிவெண் டருநுரை யாதிவந்
தொடுங்கப், பின்னைய பிணையாந் திரைகள்
வீசிடுமோர் பிரமவே லையிலினிப் படிவாம்.

எப்பொருள் களுமா யொப்புயர் வின்றி
யிருந்ததன் னுருவிறை குறையா, தப்படி
யிருக்க வாலியா ரீரி னருளிறை யாயெமக்

கேம, வைப்பென வன்னை யெனப்பிதா வெனக்கண் மணியெனத் தவப்பய னெனவுட், செப்புயி ரெனவந் தாண்டகா ளத்தி தேசிகன் றிருவடி பணிவாம். 3

அருந்திய காலத் தற்பமாப் பிற்பேரௌடத முடலினின் றுடலை, வருந்தல்செய் பிணியெல் லாமகற் றுதலின் வஞ்சனே னெஞ்சின்மாற் றரிதா, யிருந்தவெப் பற்றும் பிற்றைநாள் களின்விட் டேகவன் றேகடைக் கணித்தல், புரிந்தநங் குரவனருளிருந் தமையெப் பொழுதுமுண் ணிணைந்துவாழ்த் திடுவாம். 4

அரையன்வா யுரைகள் வரைதரு முடங்க லதுவரக் காணின்மற் றவனு,டரையின் வாழ் பவருண் ணடுங்கியோர்ந் ததன்வாய்ச் சாற்றிய முறைசெய்வா ரென்றுற், கரையில் பே ரின்பந் தரவெமக் கிறைசொல் கட்டுரை யென்னின்வே றென்னை, யுரையுள வேதா கமமவ னெனக்கண் டுரைத்தவா புரிகுவ தல்லால். 5



கற்பழ மாகப் புரிதலிற் பெரிதென் கருத்தினைத் திருத்திவந் தாண்ட, சிற்பரனருளாற் சொற்பொரு ளறியா தேனும்வே தாகம வழியீண்,டுற்பவ மாதித் துயரைமுற் றவத்தா னுணர்ந்தவர் துறவெனும் வாளா, விற்பொருந் துதலை முதலவா வறுத்தோ ரின்பவீ டுறல்சொலற் கியைந்தேன். 6

துணையில்பே ராசைக் கடலுளோர் கரையாந் துறவுவந் துறவுந் ததற்கோர், புணையெனப் பெரியோர் வகுத்த நூல்களின் முற்போதமி லேனுமீ துரைத்த, லுணைய மெய் வருந்த வயனெடு மாலன் றுயர்ந்து தாழ்ந் தோடியுங் காணு, விணையிலி நடித்தல் செயமருங் கலகை யினமசைந் திடுதலி னன்றே. 7

கயல்விழி மனைவி யனைமுத வியவாங் கட்டது தனையென தெனவு, மியல்பதா மசுத்த மாதியா ருடற்கட் டிதனையா னெனவும்வைத் தெனுமோர், மயலதா மிருளைத் துறவெனு மொளியான் மாற்றிநெஞ்

சகத்தினை விளக்கஞ், செயலினிந் நூற்குப்
பெயர்வயி ராக தீபமென் றுரைத்திடப்
8
படுமால்.

உருட்கறங் கூசன் மநமொடுங் கிட
வென் றுணர்வுநேத் திரக்கியா னெனதா,
மிருட்கெடுத் தெலாமாம் பொருட்டிகழ்த்
திடுமோ ரெழில்வயி ராகதீ பத்தை, மருட்
கொடும் பாசக் குழிக்கண்யாம் வீழா வகை
யரு ளினன்மறை முடிவின், றெருட்கமை
வீர சைவனெஞ் சாந்த லிங்கதே சிகன்றெ
ருட் சுடரே. 9

பாயிர முற்றிற்று.

---

## நூல்.

தோன்றிநின் றழியப் படுங்கொடும்
பிறப்பிற் றுன்பமே யன்றியெட் டுணையு,
மூன்றிநெஞ் சகத்தோர்ந் திடிற்பிறி திலையா
லுண்டுபோற் றிரித்துயிர்க் கெல்லாந், தான்
றிகழ்த் திடுமோர் வகற்றிரு ளிருளுந் தவிர்
ந்துமற் றதுமுள படியே, யான்றவீ டுற
முற்பவந்தவம் புரிந்தோ ரகத்தினுட் டெரி
தரு மன்றே. 1

உடலிதுற் பவத்தோ ரைம்பெருந்
துயர்மாய்ந் துறுகணத் துயரினெண் மடங்
கா, லிடையுள திதிக்கட் டுயரமூப் பறி
வோங் கிளமையிற் பிணியுறு விடத்தும்,
விடலரும் பசிநோய் காமநோய் தணிப்
பான் மிகுபொரு டேடுத றுயரீண், டடை
யினு மதனைக் காக்குத றுயர்வேந் தாயினு
மிகுநாற் றுயரே. 2

இளமையிற் பிணியற் றொருகுடை
நிழற்கீ ழிருநில முழுவதும் புரக்கும், வள

மைபெற் றுடைய மகற்குமெப் பொழுது வருங்கொல்கூற் றெனும்பயத் தானு, முள மிகப் பறைநின் றறையுமேற் புவிமீ துடையரோ மற்றைய ரின்பங், களிமிகுத் திருப்பர் தெளிவிலா மையின்மேற் காரியங் கருதுரு நரரே. 3

பிறப்பிறப் புடைய ராயிடை யினும்பல் பிணிபயந் தணிவில்கா மாதி, யுறப்படு தவின்வா னவர்க்குமற் றென்னை யுளசுகந் தேவின்மா நடத்திற், சிறப்பிவை யென்ரூற் குறுக்கியோ நிகளின் றீமையுங் கொடியர்வீழ் நிரயத், தறப்பெருந் துயரு முறைப்பதென் பிறப்பூ டாதலாற் றீதலா திலேயே.

அரிதுபெற் றிடினும் பெற்றதின் விருப்ப மறப்பெரு தனவிரும் புயிர்க, டெரிய கிற் கிலமீ தெனமுன மடையாச் செல்வமாய்ச் சொல்பவித் திரமா,யுரியசிற் சுகமாய் நித்தமா யொருவீ டுளதெனக் கேட்டுமற் றதனிற், பிரியமற் றினமு முனமுறும் பொல்லாப் பிறவியே பெறவிரும் புதலே.5



துன்பவெம் பிறப்பி னிழிவையு மழியாச் சுகபர வீட்டுயர் வினையும், பின்பவை தொலேத்தெய் தருங்கரு வியதாப் பெற்றவிப் பிறப்பையு மிதனின், மின்புரை நிலேயாமையையுமோர்ந் தனரோ் விவேகியுமெனிற்பினும் விடயத், தன்புரு வீடு புகமிகவிரையா தரைக்கணர் தரைக்கணுற்றிடுமே.

வினேப்பிறப் பொருவன் றுயரமென் றுணரின் விடயபோ கங்கணச் சுதலுங், தனக்குட லநிய முணர்தரின் மரணஞ் சார்குறிக் குளநடுங் குதலு, நினைத்திடி னிதன் பேற் றருமைமா தவங்க ணீங்கிநாள் கழித்தலுந் துணிவி, லநித்தமோர்ந் திடினோர் கணமெதிர் காலத் தவதிகூ றிடுதலு மிலேயே. 7

கருமமொன் றியற்றப் பிறர்கையிற் கருவி கவர்ந்துளோன் பினுமவர் கொளுமுன், விரைவினெண் ணியசெய் யாதுமற் றதையே மிகச்சிறப் பித்துநோக் குதல்போற், புரையில்வீட் டின்ப மடைகுவா னதற்

குப் பொருந்திய வருந்தவம் புரியா, தொரு கண மேனு நிலையிலிவ் வுடல்வைத் தொப் பனை செய்துநோக் குதலே. 8

பவத்தனிப் பரவைக் குரவையைத் தாநப் படுவையைக் கொடுகடப் பரிதா, லுவப்பொடு தவப்பா தையினிவர்ந் தன்றி யுண்மையித் தகவிகந் துலகோ, ரவப்பொழு தகல விருப்பதென் விருப்போ வகன்றவர்க் கருத்தலா திகளாற், றவத்தினை மறந்தார் கொல்லெனுஞ் சொல்லைத் தமதுளத் து ணர்கலார் போலும். 9

ஈதலே யறமு மநித்தமா மனைத்து மிக ழ்ந்துகை விடுதலே வீடு, மாதலாற் றாநக் குரியவில் வாழ்க்கை யதனையே யறமெனக் கூறிக், கோதிலா வீட்டி னிலக்கண மிருத் தல் குறித்துமெய் யுணர்வையுந் துறவு, டோதினார் வேதந் தனைத்தமி ழுருவத் தொ ளிதெமக் களித்தவள் ளுவரே. 10

நிறந்தருந் தெய்வப் புலமைவள் ளுவ னார் நீத்தவர் பெருமைநூன் முகப்பாற்,சிறந்



திட வமைத்தாங் கதுகொடில் வாழ்க்கைச் சிறுமைதூற் றினரது தெரியார்க், கறஞ் வா தியற்றி னவனினுங் கோடி யதிகமா மெனமந மறாது, துறந்துளோ னையும்பட் டணத்தெம தடிக டொகுத்தகட் டுரைதிக ழ்த் திடுமே. 11

பிறப்பெனு முவரிச் சுழியதா மெழி லார் பெண்டிரா தியவுயிர்ச் சார்வுஞ், சிறப் புறு புவியா தியபொருட் சார்வுந் தீரநீக் குதறுறவவற்றா, டுறப்படு மெவைநீப் பினு மறி வுடையோ ரொருதம தனைபிதா வினை யுந், துறப்பரேற் றுறப்போர்க் கருநரெனு நீ சொற்றசொற் சத்திய மாமால். 12

விடையதூ ரிறையே தாதைமற் றவன் பான் மின்னெம தன்னையன் னவரைக், கடையரே மறந்து துறந்துதா னன்றோ கடு ம்பவ விடும்பையுற் றனமிவ், வடைவுணர்ந் திலைபோன் றாடலிதற் கேது வாயவர் தாய்பிதா வெனநெஞ், சுடைவுறா நின் றாய் பவந்தொறிவ் வணமுற் றாளவுயிர்க் களவியா துரையே. 13

னதகத் தகலா திருந்துபே ரின்பந்
தருதலான் மனைவியுந் தன்பா, லினிதுதித்
தொருதன் வினையொழித் தசையா திருத்தி
வீட் டமுதருத் துதலா, லனலருஞ் சுதனு
மொருவனுக் கவனா டுதயமா யெழுந்தமெய்
யுணர்வே, பினையிஃ தன்றி மனைசுத ரென
யாம் பேணிநாட் கழிப்பதும் பிழையே. 14

வேண்டினுண் டாகத் துறக்கவென்
றமையால் விருத்தனாய்க் கருத்தழிந் துரு
வங், காண்டல்செய் விழிபஞ் சடைந்துட
னடுக்குங் காலம்வந் தடைவதன் முன்னர்,
மாண்டகற் பதனாற் சாலியைப் போலு மனை
வியா தியசமா தியினாற், றீண்டுமா நந்தம்
பலவடைந் திடுதற் கெண்ணிநீத் திடுவர்
புண் ணியரே. 15

இளமையின் மனையைத் துறத்தறீ தெ
னிற்றா னிறத்தலிற் றுறத்தலீ டலவா, லள
விறீ தஃதாங் குயிர்ச்செய லன்றே லாபற்
சந் நியாசந்தி ததுமெய், விளிதலாற் பழுதின்
றேற்பினு மிருப்பார் விடுதறீ தடபிணிகுறித்



தே, லுளையுநோ யிலரு மிறப்பதென் பிறப்
போர்ந் தொழித்திடிற் பழித்திடா துலகே.

இக்கணத் திருந்த தினிவருங் கணத்
தா டிருக்குமோ மரிக்குமோ வுடலென், றக்
கண மனையா திகட்கான் றணையா மன்றெ
ன வெணித்துற வறஞ்சார், மிக்கவ னாபற்
சந்நியா சியுஞ்சார் வினாக்குஞ் சேர்த்திவிட்
டவனுந், துக்கமே வலிற்பின் பவரிவன்
போலுந் துறவான் றென்பதுந் துணிவே.

பிறந்தவப் பொழுதே யினியொரு
தலையாப் பிறப்பறுத் திடுவமென் றெணி
யே, யுறைந்தனை வயிற்றிற் பினையதுற் பவ
த்தா டுறுபெருந் துயரினா லுயிர்கண், மறந்
துறு முறையுஞ் சுகாகன் றமையு மதித்து
நெஞ் சழிவினம் போல்வார்க், கறைந்திடு
மலது பிறப்புணர்ந் தகல்வார்க் கவதியு
மறையுமோ மறையே. 18

கருப்பமா ருயிரத் துயர்பெயர்த் திடுதல்
காரண பூரண ஞானம், விருப்பமா யடையக்
கடவமென் றிருக்கும் வியாசர்சே யடைந்
தது மதுவே, திருப்பியீண் டதனைத் துற

வின்மீ தேற்றிச் செப்பலென் னெனிற்றுற
வினைவிட், டிருப்பதோர் ஞான மெவன்கொ
னீத் தவரென் றிசைப்பதென் பெயர்மெய்
ஞ்ஞா நிகட்கே. 19

ஞாநியஞ் ஞாநங் கெடுத்தலாற் றுற
வோ னெனப்படு நவிற்றினஞ் ஞாநந், தா
னுட வினைநா னெனுமக விருளென் றனை
யிஃ தெமக்குமொத் ததுவா, லூனமின்
மறைதேர்ந் தொருசிவ நானென் றுளத்
துணிச் சயித்தவர் கணமே, யானென றவிர்ந்
தவ் விருளுமாய்ந் திடுமென் றிசைத்தனை
யிதுபழு தன்றே. 20

திரிவித வுலகத் தரிதொரு ஞாநி தேர்
விடத் தென்றுமோ ரொன்றை, யுரைசெயிற்
பிரம வித்தையொத் தரிதோ வென்றுமிவ்
வுலகுரைப் பதனா, லரிசொல்கீ தையிலும்
பிரமசா தகரி ஞர்க்குள வருத்தமென் பத
னாற், பெரியதோர் வருத்த மெனைமறை
துணிந்தப் பிரமநா னெனவிருத் தலினே.



வருத்தமொன் றின்றிச் சாரலாம் பிரம
மென்றயன் வகுத்தகீ தையினூ, டுரைத்த
தெற் றினுக்கா யெனிற்பர ஞான முணர்ப
வர்க் குன்னுத லுரைத்த, னிரைத்திடு தொ
ழில்க ளொன்றும்வேண் டாது நீத்துவா
ளாவிருத் தலினா,லருத்தமற் றதனுக் கோர்ந்
துநூ றெளிதலாகநீ துணிந்தனை போலும்.

சிறியவர் மணற்சோறுண்டுதேக்கிடல்
போற் றேர்ந்துநூ றெளிந்தமாத் திரத்தி,
னறிதரிற் சிவமும் விடயமா மெனநீத் தகத்
திரு ளறுதுவைத் தந்தோ, வுறுமகம் பிரம
மெனவுரைத் திறுமாந் துறைதலோ ஞாந
மஞ் ஞாநந், துறவினை யுறுது மாயுமே வா
யாற் சுடரெனி னிருடுமிந் திடுமே. 23

ஞாநியே யெவரும் வணங்குதற் குரி
யோ னவிலுமா சௌசமில் பெரியோன்,
மாநிலத் தவன்றா னுடல்விடிற் குகைப்பால்
வைக்கவென் மறைப்படி புரித, லானும்வே
தாந்தப் பொருடுணிந் திடினுஞ் சாற்றினில்

வாழுமந் தணர்க்கின், ஞானதாற் றுறவு பெற்றநற் றவரே யமலவீ டடையுஞா னிகளே.

தேர்ந்திடி னபரம் பரமெனவிரண்டாய்த் திகழ்தரு ஞானமாங் கவற்றுட், டோர்ந்திடு மறையா நியகலை யபர முயிர்பர னெடுவிர வயிக்கங், கூர்ந்துண ருணர்வே பரமதைத் தெளியக் கூறன்மாத் திரங்கலை ஞானஞ், சார்ந்துணர் வரிதப் பரனையோர்ந் தன்றிச் சாற்றினவ் வயிக்கமாந் தலமே. 25

அடுத்தவிச் சீவன் றன்மையோர்ந் தன்றி யறியொணுப் பரனையஞ் ஞானங், கெடுத்தலாற் சீவன் றனையுமோர்ந் தொருவர் கிட்டொணு நனவினிற் சுழுத்தி, யுடைத்து மற்றெவனுக் கவனவஞ் ஞானமுடைக்குமுட் காரணவா தனைக, டுடைத்திடி னபாவ மெனப்படு நனவிற் சுழுத்தியு மெளிவந்து தோன்றும். 26

யோகசா தனையால் வாதனை கரணக் கொழியுமவ் வியோகமு மிருமைத், தாகுமே கிரியை ஞானமென் பேதத் தாதநா திய



தொழில் யோக,மேகமாம் பொருடோர்ந் ததுவிது வெனுஞ்சுட் டிறத்தன்மற் றையதிருவகைக்கும், போகவேண் டிடுமைம் புலன்களு மிறந்தப் புலனவா வொழித்தலாற் போமே. 27

ஐம்புல னடல்வேண் டும்விடல் வேண்டு மொருங்குவேண் டியவனைத் தையுமென், றும்பரும் பரவு மொருதமிழ் வேதமுரைத்தலா னேரிரு வகையா,நம்புறச் சார்பை வெறுத்தவா வறுத்தைம் புலனெழித் தொழுங்கினு டருமச்,செம்பொருள் காண்பதறிவறி யாமை சிதைத்தல்வீ டெனத்திகழ் தருமால். 28

அரம்பையுள் ளூறுதண் டெடுத்தலி னொருவ னநுபவ மாஞ்சிவ முணர்த, னிரம்புமெய் யுணர்வத் தண்டின்மீ தொன்றி நின்றநா ரனைத்துநீக் குதல்போல், விரும்பிருவகைப்பற் றையுந்துறந் திருளை வீட்டல்வீ டிவற்றையே யன்றி,வரும்பா வுரனும் வீடும்

வே றறியேம் வார்த்தைமாத் திரத்தியாம் பெறவே. 29

இருவகைச் சார்பா மொருபுறப் பற்று மிடையதாங் கடையுடற் பற்றும், விரிகர ணங்க ளாகுமுட் பற்று மெனத்திரி விதம் விளங் கிடுமித், திரிவிதத் தினையுங் காத்திரங் கரணஞ் சேர்த்தியொன் றுக்கொடுட் பற்று ம், வருபுறப் பற்று மெனவிரண் டாக மதிப் பரவ் வணந்துற வையுமே. 30

இருவகைப் பற்றி லொருவனே ஞானி யெனப்படிற் புறப்பற்ற தேனு, மொருவுத விலரு மெவணமப் பெயருக் குரியர்வே ரொ ன்றுமில் கொடியுந், தருமிலை மலர்கா யெ னினகப் பற்றி றவர்புறப் பற்றையுந் தண வார், மருவினு மஃதோ ரொருவர்வே ரன் றீர் மலர்க்கொடி வாடுரு வகையே. 31

வேரறக் கொடிவா டுதலினுட் பற்றை விடுக்கின்மற் றையபற்று நேரே, சோருத லியல்பா மதனையே முன்னர்த் தொலைக்க வேண் டுவதெனிற் கடுமுட், சாருமோர் கொடியின் கிளையினைத் தையுமுன் றறித் தொழித் தலத தனிடையா, ரோர்தனி வேர்கொள் ளரிதரி தகப்பற் றொழித்தலும் புறப்பற்ற றறவே. 32

முள்ளில்சில் கொடிவேர் கொளலின் முற் சநகன் முதலவோ ரொருவர்மற் றொ ருதம், முள்ளமா சணுகா வியல்பினு னகப் பற் றொழிப்பினு முனமெனை யுறழுங், கள் ளநெஞ் சினர்பற் பலரும்வீ டடையுங் கதிய தன் மையிற்றுற வளந்த, தெள்ளியோர் புற ப்பற் றொழித்தலே முதற்கட் செப்பின ரெ வர்க்கு மொப் புறவே. 33

விடத்தகு மகப்பற் றினைமுனம் புறப் பற் றொழிப்பதெற் றினுக்கென விளம்பல், படிற்றொழுக் கினர்சம் மதமும்வா னவரும் பயிலில்வாழ்க் கையும்விடுக் குதலென், றெடு த்துமைக் கறிவா சாரமோ தியசொற் கிழுக் குமா குதலின்மா சியல்பாத், துடைத்தசிந் தையர்க்கு சிந்தையி லொழுக்காச் சொல்வர் முன் புறல்புறத் துறவே. 34

ஒன்றிய பாச விருபேரந் திடுதற் குபாய மைம் புலனெடுக் கிடுத, லொன்றல திலே யென் றதுசெய்வோ னவைவேண் டனைத் துமுன் விடாதுவைத் துறுத,லென்றுமெவ் விடத்து மெனைமுத லுயிர்க ளெவற்றையுங் கொலைசெயேன் வெருட்டே, னென்று சொல்விரதி யொருவனு டொறுங்கை யிடை யினோர் படைகொளு மியல்பே. 35

சாதக தசைக்கண் விடயமே தடை யாஞ் சாத்திய மானபின் புசித்தற், காதல் வைத்திடினப் பிரமவா நந்தத் ததிகமோ விடயவா நந்தங், கோதில்வீட் டின்பம் பெ றுகலா விடினுங் கூடுதற் கெனிற்கரி பிழை க்கிற்,றீதிலோர் சிங்க மதனையே யன்றித் தேடுமோ தேரையூன் றினவே. 36

படையெடுத் தமர்க்கட் சாருமோர் வீரன் பகைஞரைச் சயங்கொளா விடினும், விடை யெனப் பொருதாங் கிறத்தலே யன்றி வெ ந்கிட வுன்னிடா னதுபோற், கடையென விடய மிகழ்ந்துபே ரின்பங் கருதினேன்



பெறுகலா விடினு,மிடையரு தனைநா டுவ தலான் மறந்து மெண்ணுமோ மண்ணின் வாழ்க் கையையே. 37

இந்திர சாலத் தொருநகர் காண்போ ரெனத்தநு முதற்பிர பஞ்ச,நந்தினுங் கெடி னும் பூரியா வாடா நன்மனச் சநகநா தியரு, மந்திரி முதலோர் மீதுநூ பாரம் வைத்தொ ரே காந்தத்துள் வதியாத்.தந்தொழி லொரு க்கிச் சமாதியுற் றன்றோ தவிர்ந்தனர் காண வா தனையே. 38

சொற்றிடின் மயக்க மற்றுதித் துள வச் சுகருமொண் டாதையைத் துறவா, வுற் றிருஞ் சமாதி யுற்றகப் பற்று மொருவிவீ டடைந்தனர் சநகர், முற்றவ முனிவர் நால் வரு மொருநான் முகப்பிதா விடத்தவன் வளத்தோர், பற்றுமற் றகப்பற் றையுமுயர் சமாதி பணியொழித் தெண்ணவீ டடைந் தார். 39

தத்துவ முணர வேண்டினேன் மனை முற் சகலமும் விடுத்துமெய்ஞ் ஞாந, முத்

திரைதிகழச் சமாதியுற் றல்லான் முடியுமோ வெனவுமை முதலா, வைத்ததற் குழாத்தை யொருவிநீள் கல்லான் மரத்தினீ ழலிற்சமா தியையுற், றத்தனே யுணர்த்தி னனெனிற் பினும்வே றறைதனம் மிகுமட னன்றே.

எடுத்துள குடும்பச் சுமையொடீண் டொருவ னெங்ஙன ஞானவா சானே, யடுத் தவ னேவ ஞெடுத்தருள் சுரக்கு மளவுநின் றுளமகிழ்ந் தன்னேன், கொடுத்தநாள் வாங் கிக் கொளும்பர மார்த்தங் கூடினுங் காலமா திகளாற்,றடுத்துறை தொழிலை விடுத்தலாற் சமாதி சார்ந்தஃ தணாவும் படுமே 41

தனித்திருந் தொருதம் மநத்தையைம் பொறிவாய்த் தடுத்தகப் படுத்திஃ தெத்தை, நினைத்தெழா நின்ற தென்றுநோக் குநரே நீக்குவர் வாக்கொடு தொழிலைப், பினைத்த டை யாம்போக் குவரில்வாய்க் கையையும் பேச்சைநா டொறும்பழ குநரீ,தனைத்தினு ன் றேனும் விடார்பிறர் காண்ப தன்மையா னகப்பற்றே விடுப்பார். 42



தந்தைதாய் முதலாம் பந்தநீங் கிலர்க டாமுயு நெறியதின் றெனுஞ்சம், பந்தனு ருரையும் வேண்டிய தெய்தப் படாதுசுற்ற மும்விடா விடினே, னெந்தைவாக் கனரய ருரையுமா தியவாக் கியம்பிர மாணமா மெ னக்கொள்,புந்தியார் புறப்பற் றறவகப் பற் றைப் போக்கவாய்ப் போக்குத லிலரே. 43

விடுக்குநர் புறப்பற் றதினுயிர்ச் சார் பை விடுத்துமற் றையபொருட் சார்பைப், பிடிக்குத லொழுங்கன் றெனினுறை யிட மும் பேணுரு தொழித்தறீ தெனவே, படி க்கணீ யுரைக்கக் கேட்டன முனைப்போற் பற்றிநோக் காமையி னன்றோ, விடுக்க ணென் றனைத்தும் விடுத்தன ருலக மேத் துபத் திரகிரி முதலோர். 44

துறந்தவன் பொருட்சார் புறவறிவிலர் க்குத் தூயஞா னாதிசாத் திரங்க, ளறைந்தி தம் பேசிப் பொருள்கவர்ந் ததனு னச்சமு மிச்சையா திகளுஞ், செறிந்துற வகத்துண் டினியலுணி ருக்குஞ் செய்தியா னய்

சொரிதழல்போ, லிறந்திடா மநவா தனை
பினைத் தனதோ ரெணத்தையெவ் வணத்தி
னான் முடிப்பான். 45

பேர்ருளறத் துறந்து பயிக்கமேற் றரு
ந்திப் பொருந்தினு மோரிடம் பிடித்துள்,
வெருளறப் பனியா தியினுடற் பழக வேண்
டுமின் றாகுதரானு, மிருளறத் தீப மேற்றன்
முன் றொழில்க ளென்றும்வேண் டிடுதலா
னிடரு, மருளறச் சிதலை முதலுயிர்க் குறுக
னாற்றலு மதன்பொருட் டாமால். 46

பிறிதுநோய் தன்னோய் போன்றுபோ
ற் றானேற் பெரிதுநா லரிதினோர்ந் துணர்
ந்த, வறிவினா னுண்டோ வாவதென் றமை
யா னுறைதரு சராசர மெவைக்குஞ், சிறிது
மோர் துயர மறவியுற் றேனுஞ் செய்யுமே
மெய்யுணர் வடைவான், மறுவறு துறவைப்
பொன்செய்வா ணிகர்போல் வருந்தி நா
டொறும் வளர்ப் பவனே. 47

தனக்கினி யவனும் வகைசரா சரங்க
ணினைகவென் றுமைக்குரைத் ததுவும்,



வினைக்கடல் கடந்த பரதர்முற் சிவிகை
சுமந்துசென் றதுவுமோர், மேலோர்,
பினைக்கொல் பாம்பாதி யுறுதலஞ் செலுங்
காற் ,பேணவிற் றமைநடந் திடும்போ
தினக்கறை யானுதியமரி யாதங் குரமுரி
யாதியங் கிடுவார். 48

தம்மிடத் தேனுந் தமக்கினி யவர்பா
லேனுமோ ரிடர்வந்து சாரி, னம்மலூழ் மு
றையென் றறிந்துமேழ் கடலோ ரணுவென
வுருகுமென் போல்வா, ரிம்முறை துயர்வே
றுயிருறி னிரக்க மின்றிய தன்றியுந் தம்மால்,
வெம்மைய கொலையொன் றடையினு மத
னா ழென்பதென் மிகமுக மலர்ந்தே. 49

இம்மையி னிகழ்ச்சி மறுமையிற் சிறு
மை பெய்துமென் றுயிர்க்கொலை புரியாச்,
செம்மையைக் கநக மாதிகைப் பற்றாத்
துற்வினைச் சிலரடைந் திடினுந், தம்மை
யொத் துயிர்க ளனைத்தையுங் காணுந் தயவு
யர் தபனிய முதல, மும்மையு மோட்டிற்
காட்டிலன் னையிற்காண் டுறவொரோர் தவர்
க்கலான் முடியா. 50

அறைதவிற் கொல்லா நலத்தது நோன்மை யெனவரு டுறவுசா ரகத்தா, டுறுமஃ துறவே சினமழுக் காறங் குறாமையாற் கொடுஞ்சொல்கூ றாமை, புறமுறை யாமை மருவிய விரண்டாற் பொருவின்மெய் யுறுதியோர்ந் துறைத்த, னிறைபெருந் தவத்தோர் வாக்கினி னான்கு நிகழுமென் றியம்புவர் நெடியோர். 51

கான்றசோ றதனிற் கண்டுபொய்ப் போக மனைத்தையுங் கைவிடுத்திடினுந்,தோன்றுல கினைமெய் யெனக்கொடு மீக்கூற் றுறவிருப் படையினத் துறவோன், சான்றதா யுளதன் னுளமிலை யெனவுந் தற்பரா நந்தமுற் றவனைப், போன்றிரு விழிமேற் செருகியீண் டுரைக்கும் பொய்யையெவ் விதத்தினாற் போக்கும். 52

இத்திற னருள்கைப் பிடித்தெலாம் விடுத்தோ னேவல னொருவனோ டுறினுஞ், சித்தசஞ் சலமுண் டவனொரோர் காலை செயுஞ்செயல் பிழைக்கினுட் சீற்றம்,வைத்திட



ப்படுத லாற்றன துடற்பால் வந்தொரு பிணி யுறிற்றுணிவோ,டத்தனே யுளனென் றிருத்தலினிருத்த லரிதனோன் றனையுறி னதனால்.

யாதியா தொருவ னீங்கியா னோத லதனினா லதனினா லிலனென்,றோதலா லனைத்துந் துயர்தரு மெனநீத் துயர்பரம் பொருளினைக் காட்டுந், தீதிலோர் குரவ னெங்குளனெனவே தேடுமா லலைகடல் சூழும், பூதல மிசையோர் துறவினோ னறவு பொலிமலர் தேடும்வண் டினைப்போல். 54

சமரமுற் றிடாது புறந்திரி யொருவன் றனதெதி ரடைதரு படைக்கைக், குமரனை நோக்கி மிகுபராக் கிரமங் கூறினுந் தேறல ரதுபோ, லமர்தரத் துறவு சமாதியோ திடினு மவற்றினுக் கயனடை யினரேற்,றம ரெனத் துணிவுற் றவரொடும் பழகார் தத்துவ நிலைதலைப் படுவோர். 55

நீரிடத் தன்றி யந்தரத் திடையே நிகழு மோர் மரைகொள விரும்பார்,பாரிடத் தெவ

ரும் விநோதிகள் சாலம் பண்ணலென் றெ
ண்ணிமற் றதுபோற், சிருடைத் திறவு
சமாதிபெற் றுலகிற் றிகழினு முயிர்க்கெ
லாந்தயவுஞ், சாருட் குருபத் தியுமிலார்
தமையுந் தமரெனப் பழகவுந் தகுமே. 56

இதுநெறி யெனவோ ரோர்க்குமற் றொரு
ருவ னேகினு மாத்தன்வாய்க் குறிக, ளது
தனிற் காணு விடத்தில கருமோ ரடிபெயர்த்
திடுகல ரதுபோ,லெதிரறு சமாதி யாதிபெற்
றுடையோ ரென்னினு முன்னவ னுரைத்த,
சதுர்மறை யாக மாந்தநிந் தகரேற் றமரென
லவரையுந் தகுமே. 57

ஈங்கறை முறையிற் றேர்ந்துபா ரிதன்
மீ தெங்கணுந் தேடியோ ரிடத்தி, னேங்
கருண் முதல நான்குமோர் வடிவா யுளதென
மறையினீற் றுரைக,டாங்குநா வொடுஞ்செ
ங் குவளைமார் பொடும்பொற் சரணொடுஞ்
சரணென வடைந்தோர், தீங்கொழித் தருள்
வான் றிகழுமோர் குரவற் கண்டுளங் குளிர்
ந்தனன் றெளிஞன். 58



காரிய மாக லாற்சகம் படைக்குங் கார
ணன் குலாலனி னுளனென், னோரியல் பெ
னவேழ் கடலுமொன் றாக்கி யொப்பிடுங்
கருணைய னேனும், பேரியை பிறப்புத் தனை
யடைந் தவர்க்குப் பினையுரு வகைகெடப்
பார்க்குங், கூரிய விழியோ னுதலி னறவுங்
கொடியனு மாகுமக் குரிசில். 59

செப்பிருங் கைலைக் குருமுறை மையிற்
றன் சிரமிசைச் சரணம்வைத் துளவோர்,
மெய்ப்பர னருளை நினைதொறு முளந்தீ மெ
ழுகுகல் லெனவுரு கிடினு,மைப்பவந் துடை
த்தன் பினர்க்குவீ டளிக்கும் வல்லப முடை
யமற் றொருதா,ணெப்புமிக் கிலியா கவினி
றை பத்தி யுளனுமன் றாகுமவ் வும்பன். 60

கருடனை நினைவோர் பார்வையாற் பிறர்
பாற் கடுவொழித் தலிற்றனை நினைவோ,
ரொருவரை நோக்கி னவர்களும் பாச மொ
ழித்தல்செய் துறவொடேய்ந் துறினு,மருண்
மகட் புணர்ந்து ஞானசந் ததிபெற் றவரொடு
மகிழ்ந்திருத் தலினக், குருபரன் றன்னைப்

பின்னைநேரில்லாக் குடும்பியென் றுரைக்க
வும் படுமால் 61

தூலவுசெங் கதிரோ னிருளினை யுண
ராக் கொள்கைபோற் றுமொரு காலுஞ்,
சொலுமறி யாமை யறிகிலா ஞானத் தோன்
றலே யெனினுமத் தூயோ, னிலகுமா நந்த
வுருவினை யணுக்கட் கீந்ததற் கிணையொரு
துணையின், மலவுட லவர்பாற் கவர்தலி னிஃ
தோர் மடமைபெற் றுடையனு மாமால். 62

வதுவைநாண் மறையோர் வழங்கியாத்
திரையின் மற்றருந் ததியைநோக் குதவி,
னிதுவுமொன் றெனத்தம் முடல்பொரு
ளாவி யியுமெம் போலிக டமக்குங், குதிரை
கொண் டிடவன் றடைந்துட லாதி கொடுத்
தவன் போற்கொடுப் பவர்க்கும், பொதுமை
யுற் றிவணோர் மானுடன் றுணுப்த் திகழுமப்
பூரண புராணன். 63

பாரினட் டாங்கா திகளொடக் குரவற்
பலதாம் வலம்வந்து பணிந்து, சீரிய துதி
செய் தநுதிக மவற்றூர் றிருவுளத் தடைக்



கவும் பட்டுத், தூரமோ டணிமை யறவிறை
கருணை சுரக்குநா ளளவுநின் றேவ, லாரிவன்
றனக்கொப் பெனச்செய்தொண் சரண்பெற்
றறியவேண் டுவமுழு தறிந்தான். 64

சற்குரு வருளா லயமுந் திரிவுந் தானற
மறைமுடி வுணர்ந்த, பிற்குரு பான்றூண்
முற்சரண் புகுந்த பெரியவ ரினமரீஇ யிருந்
தொண், சொற்களி னரிய பொருள்கடேர்ந்
தவணந் தொலைத்தொரு சிறிதுநாட் பின்
னர்க், கற்குத லாதி யனைத்துநீத் தென்று
ஞானசா தகத்தினுள் கழிப்பான். 65

அரும்பொறி யின்மை பழியன்றி யார்
க்கு மறிவறிந் தாள்வினை யின்மை, பெரும்
பழி யெனலா னொருவன்வீட் டின்பம் பெரு
மைகொ டிகழ்கலர் பெரியோர், விரும்பஃ
தடையும் வகையருட் குருவான் விளங்கியு
முளங்கையிற் கனிபோல், வரும்படி நாளு
முயன்றுறு வென்போன் மதியிலார் தமை
யிகழ் வதலால். 66

பகர்தரு தொழில்க ளனைத்துமோர் சிறி
து பண்ணவேண் டுவபணி விடுத்துப், புக
லுளை யடக்கித் தனியிடத் திருந்து போற்றி
செய் தருட்குரு பதம்பின், மிகமுயன் றிதய
வருத்தமெய் தாமன் மெலிந்துகை விடுதல்
செய் யாம, லகமுக மாக்கி மநத்தைநா டொறு
மோ ரைம்புல னொழித்தசை வறுப்பான். 67

உச்சியம் போதின் மீதரும் பசிக்கவ் வூர்
வல மாயிலந் தோறும், பிச்சைகை யிடையிற்
காடிகூ ழேனும் பெற்றது பற்றியுள் வெறுப்
போ, டிச்சையற் றருந்திப் பொருந்தவே காந்
தத் திடையினுந் தாகம்வந் தடையி, னச்சிநீ
ரூரிற் புகுந்துரு தேரி யாதியி னருந்துத
னன்றே. 68

ஞானசா தகன்மற் றுதயமா தியினு
ணயக்கொணு மயக்கமா தலினு, மீனமார்
விந்து மிகுமெனு வகன்றூ ரிகழ்ந்துகை
விடுத்தவா தலினுந், தானிரந் தொருபோழ்
தருந்திடு முணவுஞ் சமமலாற் றுழினு மிகி
னு, மூனதா ருடற்க ணுறு மற்றைக் குறக்
கமு மிகுந்திடு மன்றே. 69



மிகுத்திடு முனமிற் படுதழ லவிப்பான்
விடுபவன் கலங்கனீர் தெளிநீர். பகுத்திடா
னதுபோற் காடிசோ றேனும் பசித்
தவன் புசித்திட றகுமா, னகத்தவர் மனை
தோ றுழன்றெனக் கடிசி னல்கிடென்
றொருவன்வேட் டுணலா, னகத்துறு பசி
யும் போக்கிமற் றதுகொ டதிகமென்
பயனடை வானே. 70

எரிந்தெழு பசிநோய் தணிக்கவோர் மரு
ந்தென்றேற்றுணு தொருவனுச் சுவைவேட்,
டருந்திடு மளவும் வருந்தியப் பிண்ட மளித்
தவர்தம்மைநோ வதுவென்,னிருந் துளகிரக
வாழ்க்கையும் பினைவந் தெய்திய துறவுமல்
லதுவீண்,டிரிந்துடல் வளர்த்தியெனத்தனை
விடுத்த தெய்வத்தை நோவது மறந்தே. 71

எய்தவ னுறமற் றேவையென் னேவ
தெனவுலகுரைத்தலி னொருதாஞ்,செய்துக்
வினைக்குத் தக்கபே றிறைவன் சேர்க்
குத றனைமறந் தென்னே, வுய்தவ மறியாக்
கைதவ ரைய முதவிடார் தமையுத வினதை

வைதல்வாழ்த் திடுதல் செய்துமற் றொரு
சாண் வயிறுநா டொறும்வளர்ப் பதுவே.

தன்னரு குறுசேய் சிரத்தொரங் குலி
யாற் றுன்புடைத் தொருவன்மீ தொருவன்,
சொன்னமாத் திரத்தி னவனையச் சேயுந்
துணிவுகொ டெழுந்தறை குதல்போன்,
முன்னவன் விளையாட் டாயவைந் தொழி
ற்கு முன்னிலை யாயசீ வரைப்பார்த், தின்ன
ல்செய் சாப மிட்டுமா தவரு மென்கொலோ
தவமிழப் பதுவே. 73

பெண்ணைவிட் டகலா வொருவிடன்
றன்னைப் பிறர்வழக் கினிற்கொடு போகக்,
கண்ணைவிட் டகலா தவள்வரல் போலுங்
கண்டுகொண் டேகிபாங் கஃதெவ், வண்ண
மா யினுஞ்சீக் கிரத்தினின் முடித்தவ் வனி
தைபான் மறிதரன் மானப், பண்ணிய
சமாதி விடுத்தறி ஞருந்தம் பசிதணித்
தடையுறும் பரிசே. 74

நடந்துறங் கொருவன் றனைமல ரமளி
நண்ணுமா புரிபின்மற் றவனுங், கிடந்துறங்



குவதைக் குறித்துமுன் னுறக்கம் விழித்த
வா கிளக்குதல் போலுந், தொடர்ந்தொரு
கணமு மிடைவிடா ஞாநநிட்டரைத் தூய
தஞ் சமாதி, யடைந்தனர் விடுத்தா ரென்ப
ரே காந்த மவர்க்கநு கூலமா தலினே. 75

நித்திரை தடைமீ றிடிற்கைகால் போர்
த்து நிசியிடைப் பூவணை துயில்வா, ரொத்
துரு விடையிற் கிடையுமப் பயிக்க வூணு
மெங் ஙணமித மென்னி, வி ; த்ரை யோர்நித்
திரைமிகிற் பாயுமெரிகொடு . பசிமிகிற் கறி
யுஞ், சித்தமே வேண்டா வென்றசொல்
லன்றோ தெரியுமோ வவர்க்கவை மிகலான்.

தென்பர வையினுட் கழிவட பரவை
சேர்நுகத் துளையினிற் செலல்போ, லொன்
பதிற் றென்ப தோடுமூ விலக்க முளவியோ
னியும்பிழைத் தேறிப், பின்பிறப் பிதுபெற்
றதனினும் பாதி பிறப்புறு நாளதாக் குறரி,
னின்பமீ தெனமிக் குறங்கலர் பிறவிக் கற
வெரீஇ யுளன்துஞ்சாங் கிடுவோர். 77

அறவுநித் திரையைத் துறந்திடி னுடற்
க ணடைதரும் பிணிகண்மற் றதனுற்குறை
தலு மிகலு மின்றியோர் சமமாக் கொண்டு
கண் டுயின்றுபின் விழிக்கி, லுறுசுகா தந
த்தி லெழுதுசித் திரமொத் துரைகுவ ரிறை
தலை கழுத்தூன், செறியுடல் வாங்கா தோங்
கநே ரவர்பாற் சேருமோ காமநோய் சிறி
தும். 78

உறக்கமும் பசியு மிகுந்திடிற் காம முற்
றிடா தற்றபோழ் துள்ள, மிறக்குமொண்
சமாதி யடைதலி னடையா விடையிலு மடு
பவத் துயரை, மறக்கலா மையினு லச்சமும்
வீட்டை மதித்தலா லிச்சையு முடலை,வெறு
க்குமிக் கிரகத் தாற்களிப் பறலு மேவலான்
மேவிடா ததுவே. 79

எங்குள புனன்மற் றிதுகழீஇ யிடுதற்
கென்றுகா லிடைப்படு மசுத்தக், கங்குடல்
குலையு மொருமகன் மலம்புக் காடவு நாடுமே
யதுபோற், பொங்குபுன் மலவூன் பொதியி
தென் றெழிப்ப லெனவரு வருத்துடல்



பொறுக்குந், துங்கமா தவற்கு மெங்ஙன மட
வார்த் தோயவு நேயமுட் டோன்றும். 80

அருந்தவம் புரிவோ ரெதிருரு வசிதா
னுதிய மாதர்வந் துள்ளம்,வருந்திடின் றியா
து புரியினு நோக்கார் மற்றிவ ணுற்றமா
சரையும், பொருந்துமோர் வெளின்மீ தேற
விட் டுளநாய் போனனி நோக்குமென் போ
ல்வா, ரிருந்துள விடத்தாங் கவர்வரின் விழி
யோ டென்படு மோபதைத் திதயம். 81

பெற்றதாய் முதலோர்ப் புரையமா
தரையெண் பெருந்துற வடைந்துளோன்
றவழுஞ், சிற்றெரு மினைத்தன் மனையென
விநோதத் திறத்துரைப் பினுமுனங் கிரகத்,
துற்றநா டனது மகடனை யவண முரைத்
திடா மையிற்பழு தென்றுற், பொற்றொடி
யவர்தோ டழுவவும் விழைதல் புரியினென்
னுங்கொலவ் வறமே. 82

சிறந்தகற் புடைய மாதரும் பாத்தை
யருமலாத் தெரிவையர் புவிமேற்,பிறந்தநா
ட் பிறந்தான்போலுநெஞ்சகத்தைப்பிரிநடை

யுரியனு மொருவ,னிறந்ததன் னிச்சை யெ
வணமவ் வண்ண மிகத்திலுஞ் செயப்படா
துடலைத், துறந்தகா லையிலு நரகில்வீழ்த்
தியம தூதுவர் வருத்தலி னன்றே. 83

மைப்படு விழியா ரின்பமோர் முள்ளி
மலரின்வாய்த் தேனையொப் பெனக்கண்,
டொப்பில்பே ரின்பம் வேண்டினேன்
வேண்டி யுலகர்வே றெவைகொடுத் திடி
னுந், துய்ப்பமற் றுடுப்ப விரண்டுமே யன்
றித் தொடுவனோ பிறிதிவற் றினுக்கூர், குப்
பைசா ரிடம்புக் கிடுதலி னவற்றைக் குறித்
தொரோ ரிடம்புகா மையினே. 84

தனைநனி யிரந்து வருந்திமற் றொரு
வன் சந்தந மாதியபூசி,யினமலர் மாலை புனை
யினு முனியா விழுத்துவை தடித்துதைத்
துடலிற், பிணமல மாதி பூசினு மன்றேன்
பிரியமப் பிரியமொன் றின்றி, வினைவழி
முனைவ னைந்தொழில் புரியும் விதத்தையே
நோக்கியுன் மகிழும்.



தந்தைதாய் பலமா தியகொடுத் திடவுந்
தக்கைபுண் செவியினுக் கிடவு, மைந்தவா
வெனலுங் குதித்தெழுந் தோடி வருதல்போ
குதல்செயு மகவி, னைந்தொழில் புரியு மெந்
தையூழ் வழியீந் தருள்சுக மாதிய வருங்கார்,
சிந்தையுள் விழைந்து முற்செலா ரழிந்து
பிற்செலார் மாசறத் தெளிந்தோர். 86

இத்தரை யிடைப்பா ழாயவா லயமற்
றிருண்மிகு முடுக்கரா திகளிற்,சுத்தமெய்த்
தவவெப் பொழுதடைந் துறினுந் தோன்று
று தச்சமங் கவர்பா, லத்தனிவ் வுடலைப்புறக்
குஞான் றழிப்பா ரிலையவ னேபினு மழிக்
கின், வைத்திவண் புரப்பா ரிலையெனுந்
துணிவு மநத்தினு ளிருத்தலி னன்றே. 87

ஊனையோம் புதல்கை விடுத்துனை
யுவப்பா ருணர்வரென் றுளுடை நம்பி,
தானுரைத் தமையா னுடல்விழைந் திடினத்
தத்துவ நிலையுங்கை தவறி, யீனமார் பிறப்
புற் றிடுவனைந் தொழிற்கு மிறையதி காரி
யென் றெண்ணு, ஞானமொன் றனையே

தொடருமோர் புருட னண்ணுவன் பரகதி
திண்ணம். 88

உள்ளதுண் டாமற் றில்லதின் றெனவெண் காடரோ திடுதலி னுறுமூழ், தள்ளொணா மையினெவ் விதத்தினு நுழைந்து தவம்புரி காலையூ னுயிரை, விள்ளல்செய் திடினு ஞானசா தகனுண் மேவுமவ் வாதனையொடும்போய்த், தெள்ளிய போக முண்டுமீண் டடைவன் சிவமதுற் பவமதொன் றிரண்டில். 89

அருந்தவ விலக்கிவ் வுடற்பரிப் பதுதா னச்சமா திகடரு மூலர், திருந்துநஞ் சிந்தை சிவன்கணே யாவர் வரினுமென் றமையிற் பே திப்பான்,பொருந்தினும் வாளா ரெதிர் முதிர் கொலைவெம் பூதமா தியவளைந் திடினு,மிருந்ததஞ் சமாதி நிலைகுலை யார்தா ரெண்ணிய வெண்ணியாங் கடைவர். 90

தேவர்மா முனிவ ரசுரர்வா ளரக்கர் சித்தர்வித் தியாதரர் முதலோர், யாவரும் விரும்பிச் சித்திபுத் திகளு மெட்டுணை யச்



சமா தியவுண், மேவுரு தகற்றித் தவம்புரிந் தடைந்தான் மேலதா மூலபண் டார, மோ வற வவையே குடிகொளென் போனெஞ் சுடையரா லடையவும் படுமே. 91

ஒருவனுக் கிருளற் றரியசிற் சொரூப முள்ளவா விளங்கினன் றறுமிப், பருவா லுருவப் பற்றுமற் றதுநேர் படுமள விறைபுரி தருணமங், கருமமெவ் விடத்துங் கண்டுதற் செயலைக் கைவிடுத் தச்சமா தியவுண், மருவுரு தகற்றித் தவஞ்செயல் வழக்கால் வாழி யெங் குரவனீ டூழி. 92

வைராக்கிய தீப முற்றுப் பெற்றது

பாயிர முள்படச் செய்யுள் 101.

சர்வஞ் சிந்மயம்.